# வர்க்க பலன் தரும் யோகங்கள்



* ஹோராலக்னம் * நவாம்சம்
* திரேக்காணம் * திரிஸாம்ஸம்
* தஸாம்ஸம் * துவதாம்ஸம்
* சித்தாம்ஸம் * சஷ்டியாம்ஸம்

ஏ.P. சுப்பிரமணியன்

# வர்க்க பலன் தரும் யோகங்கள்



SP. சுப்பிரமணியன்




91, வி. எம். தெரு,
மயிலாப்பூர், சென்னை-600 004.
தொலைபேசி : 847196

முதற்பதிப்பு : டிசம்பர் 1993
உரிமை : பதிப்பகத்திற்கே
வெளியீடு எண் : 64

விலை ரூ. 10-00

அச்சிட்டோர் :

டி. எம். எஸ். பிரிண்டர்ஸ்,
6, இராமநாதன் தெரு,
தி. நகர், சென்னை-17.
தொலைபேசி : 440155.




நம்பிக்கையே வாழ்க்கை. நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்துள்ளதும், அதே சமயத்தில் அறிவியல் ரீதியுடன் கூடிய கணக்கின் அடிப்படையில் அமைந்ததுமான ஜோதிடக் கலை ஒரு பெருங்கடல்!

கடலுக்குள் அதிசயங்கள் எண்ணிலடங்கா வண்ணம் அமைந்துள்ளன. அதுபோன்றே ஜோதிடக் கலையிலும் எண்ணற்ற வகையில் நுணுக்கங்களும், கணக்கு வகைகளும், நேரத்தின் கூறுகளும் பிரிவுகளும் அமைந்துள்ளன.

அந்தக் கூறுகளின் அடிப்படையில் பலன்கள் கணிக்கப் பெறுகின்றன.

இந்த நூலில் ஆசிரியர் திரு. SP. சுப்பிரமணியன் அவர்கள் தன்னுடைய ஆழ்ந்த அறிவின் துணை கொண்டும், ஆராய்ச்சி மற்றும் அனுபவத்தின் துணை கொண்டும் வர்க்க பலன்களும், அவை தரும் யோகங்கள் பற்றியும் தெள்ளிய நடையில் விளக்கியுள்ளார்.

வாசக அன்பர்கள் வாங்கிப் படித்துப் பயன்பெற விழைகிறோம்.

— பதிப்பகத்தார்.

# பொருளடக்கம்

# வர்க்க பலன் தரும் யோகங்கள்

## யோகம்தான் என்ன ?

மகரிஷி பராசரர், தனது பராசர ஹோரா என்ற நூலில் கிரகங்களின் பலத்தை எப்படி அறிவது என்பதை மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். பராசர மாமுனிவர் மஹாபாரதம் நடை பெற்ற காலத்தில் வாழ்ந்தவர் என்று சரித்திர ஆராய்ச்சியாளர்களின் முடிவாகும்.

கிரகங்களின் குணங்களை, பலன்களை, அவர் களால் ஏற்படும் காரகத்துவத்தை, அதனால் ஏற் படும் நன்மை தீமைகளை பதினாறு வர்க்கமாகப் பிரித்து அதனை அறியும் விதத்தையும் கூறி யுள்ளார்.

16 வர்க்கங்களாவன :

1. லக்னம் : ஒருவரின் உடல், தோற்றம், அழகு, தகுதி, புகழ் இவைகளால் அடையும் நன்மையையும் குறிப்பதாகும்.
2. ஹோரா : ஒருவரின் செல்வச் சிறப்பைத் தெரிவிக்கும்.
3. திரேக்காணம் : உடன் பிறப்புக்களையும், திடீரென எதிர்பாராத நிலையில் அடையும் செல்வத்தையும் குறிக்கும்.

4. சத்துநதாம்ஸம் : ஒருவர் இவ்வாழ்க்கையில் அடையும் அதிர்ஷ்டத்தை குறிப்பதாகும்.

5. சப்தாம்ஸம் : குழந்தைச் செல்வத்தை, அவர்களால் அடையும் நன்மை தீமைகளை வெளிப்படுத்தும் வர்க்கமாகும்.

6. நவாம்ஸம் : அன்பான துணைவரா, அழகான கணவரா, மனைவியா, அவர்களால் அடையும் இன்பம், சுகம், அதிர்ஷ்டம் இவைகளைக் குறிக்கும்.

7. தனாம்ஸம் : ஒருவருக்கு அமையும் வாழ்க்கை, உத்யோகம் அமையுமா, தொழில் புரிவாரா அதனால் ஏற்படும் லாபம்தான் என்ன என்பதை தெரிவிக்கும்.

8. துவதாம்ஸம் : தாய்தந்தையரைக் குறிக்கும். அவர்களால் ஏற்படும் நன்மை தீமைகளையும் அறிவிக்கும்.

9. சோஷடஸாம்ஸம் : வாகனங்களால் ஏற்படும் நன்மைகளையும், உயர்தரமான கார்களை அடையும் யோகமா என்பதையும் குறிக்கும்.

10. விம்ஷாம்ஸம் : வணங்கும் தெய்வங்கள் யாவை, அந்த தெய்வங்களால் கிடைக்கும் நன்மைகள் யாவை என்பதை குறிக்கும்.

11. சித்தாம்ஸம் : ஒருவர் பெறப்போகும் கல்வி வாய்ப்பு, அதனால் அடைய இருக்கும் யோகம் இவைகளைக் குறிக்கும்.

12. பாமாம்ஸம் : ஒருவரின் பலம், பலவீனம் இவைகளைக் குறிப்பதாகும்.

13. திரிம்ஸாம்ஸம் : நடைபெற இருக்கும் தீமைகளை அறிவிக்கும்.

14. காகவேதாம்ஸம் : தன் செய்கையால் நலமா, தீமையா என்பதை அறிவிக்கும் வர்க்கமாகும்.

15. அகஸ்வேதாம்ஸம் : அனைத்து பொது விஷயங்களையும் உணர்த்தும்.

16. சஷ்டியாம்ஸம் : ஒருவரின் தொழில்தான் என்ன, உத்யோகமா, சொந்தமாக தொழில் செய்யலாமா என்பதை குறிப்பதாகும்.

1. ஹோரார லக்னம் :

ஒரு ராசியை இரண்டு பாகமாகப் பிரிப்பது. ஒரு பாகம் 15°. ஒற்றைப்படை ராசியில் முதல் 0.0 to 15.0 சூரிய ஹோரை. 15.01 to 30.0 சந்திர ஹோரை. இரட்டைப்படை ராசியில் முதல் 0.0 to 15.0 சந்திர ஹோரை. 15.01 to 30.0 சூரிய ஹோரை.

குரு - சூரியன் - செவ்வாய் சூரிய ஹோரையிலும், சந்திரன் - சனி - சுக்கிரன் சந்திர ஹோரையிலும், புதன் - சூரிய-சந்திர ஹோரையிலும் பலம் பெறுகிறார்கள்.

இதில் 15°ல் முதல் 5°ல் இருக்கும் கிரகம் பலம் பெறுகிறது. அடுத்து 5°-10°லும் பின் 10°-15°லும் குறைந்து கொண்டே வருகிறது.

ஹோரா லக்னாதிபதி பலம்பெற்றால் செல்வச் சிறப்பைப் பெறலாம்.

இதில் லக்னாதிபதியும், ராசிக்கதிபதியும் பலம் பெற்றால் நீண்ட ஆயுளும், மகிழ்ச்சியான வாழ்க்கையும் அமையும்.

ஹோரா லக்னாதிபதி இருக்கும் ராசி தாயாரைக் குறிக்கும். அவரின் தகுதி, வாழ்க்கை நிலை, உடல்நிலை இவைகளையும் உணர்த்தும்.

ஹோராவில் உள்ள கிரக நிலைகளைப் பொறுத்து ஒருவரின் செல்வச் சிறப்பையும், அவர் அடைய இருக்கும் லாப, நஷ்டங்களையும் அறியலாம்.

ஒருவரின் லக்னம் ஒற்றைப்படை ராசியாக அமைந்து ஹோரா லக்னாதிபதி சூரியனாக அமைந்தால், செல்வச் சிறப்படைந்து அரசு அந்தஸ்து பெறுவார். ஆனாலும் மனச் சஞ்சலம் உடையவர்.

ஒருவரின் ஹோரா லக்னாதிபதி சந்திரனாக அமைந்தால் அழகானவர், இரக்க குணமுடையவர், மனைவியால் துன்பம் அடைபவர்.

ஒருவரின் லக்னம் இரட்டைப்படை ராசியாக அமைந்து ஹோரா லக்னாதிபதி சூரியனாக வருமானால் மிகவும் திறமை மிக்கவர், புகழ் பெறுபவர், கூச்ச சுபாவமுடையவர்.

ஒருவரின் லக்னம் ஹோரா லக்னாதிபதி சந்திரனாக வருமானால் துணிச்சல் மிக்கவர். மனைவியால் நன்மையுடையவர், சோம்பேறி.

உதாரண ஜாதகத்தில் ஹோரா அதிபதி :

1. சூரியன் - ரிஷபம், 5°.14, இரட்டைப்படை ராசி, ஹோரா அதிபதி, சூரியன் பலம் உள்ளது.
2. சந்திரன் - தனுசு, 28°08, ஒற்றைப்படை ராசி, சந்திரன் பலம் உள்ளது.
3. செவ்வாய் - ரிஷபம், 5°.26, இரட்டைப்படை ராசி, சந்திரன் சுமார்.
4. புதன் - மிதுனம், 6°14, ஒற்றைப்படை ராசி, சூரியன் பலமுள்ளது.
5. வியாழன் (வ) - கன்னி, 20°.19, இரட்டைப் படை ராசி, சூரியன் பலமுள்ளது.
6. சுக்கிரன் - மேஷம், 5°.14, ஒற்றைப்படை ராசி, சூரியன் சுமார்.
7. சனி - கும்பம், 4°.52, ஒற்றைப்படை ராசி, சூரியன் சுமார்.
8. ராகு - மகரம், 20° 33, இரட்டைப்படை ராசி, சூரியன் சுமார்.
9. கேது - கடகம், 20°.33, இரட்டைப்படை ராசி, சூரியன் சுமார்.
10. லக்னம் - மீனம், 27°.44, இரட்டைப்படை ராசி, சூரியன் பலமுள்ளது.

லக்னம் இரட்டைப்படை ராசியாக அமைந்து ஹோரா லக்னாதிபதி சூரியனாக வருவதால் திறமையுடையவர், புகழ் பெறுபவராகிறார்.

2. நவாம்சம் :

ஒரு ராசியில் ஒன்பதில் ஒருபாகம் அதாவது 1 பாகம் 3°.20. இதனால் ஒருவருக்கு அமைய இருக்கும் வாழ்க்கைத் துணைவரின் (கணவன், மனைவி) தகுதி, ஒழுக்கம், செல்வம், ஒருவரால் மற்றவருக்கு ஏற்படும் அதிர்ஷ்டம், உறவு முறையில் திருமணமா, காதல் திருமணமா, காதலில் ஏற்படும் வெற்றி தோல்வி, கலப்பு திருமணமா, அன்னியநாட்டில் பிறந்த துணைவரா, திருமண வாழ்க்கையால் ஏற்படும் மகிழ்ச்சி, தோல்வி, விவாகரத்தா என்பவற்றை எல்லாம் தெரிந்து கொள்ளலாம்.

நவாம்ச லக்னம் அமைக்கும் முறை :

ஒருவரின் ஜென்ம லக்னத்திற்குரிய நாழிகை அல்லது மணியை 9 பாகம் செய்து அது எந்தப் பாகத்தில் வருகிறது என்பதை அறியவேண்டும்.

உதாரண ஜாதகத்தில் நவாம்ச லக்னம் :

மீன லக்னம், லக்னத்திற்குரிய பாகை 27°:44.

மீன லக்னத்திற்குரிய மணி 1.50 (11° வாட்டிடியூட்). அதை 9ல் வகுக்க 1.50/9 = 12.22 அல்லது 3.055°.

மீன லக்னத்தில் செல்லாயிருக்கிற பாகை 27.44. 27.44/3.055 = 9 பாகம்.

மேஷம், சிம்மம், தனுசு லக்னத்திற்கு - மேஷ முதல் எண்ணி நவாம்ச லக்னத்தை அறிய வேண்டும்.

ரிஷபம், கன்னி, மகரம் லக்னத்திற்கு - மகர முதல் எண்ணி கணக்கிட வேண்டும்.

மிதுனம், துலாம், கும்பம் லக்னத்திற்கு - துலா முதல் எண்ணி கணக்கிட வேண்டும்.

கடகம், விருட்சிகம், மீனம் லக்னத்திற்கு - கடகமுதல் எண்ணி கணக்கிட வேண்டும்.

உதாரண ஜாதகம்—

மீனலக்னமாவதால், கடக முதல் 9 ராசி எண்ண மீனமே நவாம்ச லக்னமாக அமைகிறது.

நவாம்ச லக்னத்தில் கிரகங்களை அடைக்கும் முறையாவன:

ராசிச் சக்கரத்தில் ஒரு கிரகம் எந்த டிகிரி அல்லது நட்சத்திரபாதத்தில் இருக்கிறது என்பதை அறிந்து அசுவினி 1 பாதம் முதல் அந்த கிரகம் இருக்கும் பாதம்வரை எண்ணி அதை 12ல் வகுத்து மீதியை மேஷமுதல் எண்ணிவரும் ராசியே அந்த கிரகம் இருக்கும் நவாம்ச ராசியாகும்.

உதாரண ஜாதகத்தில் சுக்கிரன் அசுவினி 2ம் பாதம் ($5^{0}$;$14^{0}$) அது அசுவினி பாதத்தில் இருந்து 2வதாக வருவதால் அம்சத்தில் மேஷ முதல் இரண்

டாவது ராசி ரிஷபமாகிறது. அம்சத்தில் சுக்கிரன் ரிஷப ராசியில் இருக்கிறார். அதன் முறையில் உதாரண ஜாதகத்தில் அம்சத்தில் கிரக நிலை வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| லக் | | சுக் | சூரி |
| செ | அம்சம் | | குரு ராகு |
| கே | | | |
| சந் | புத சனி | | |

மகிழ்ச்சியான திருமண வாழ்க்கை அமைய நவாம்சமும் ஓர் காரணமாகும். பல கிரகங்கள் நவாம்ச லக்னத்தைப் பார்த்தால் அல்லது அதன் அதிபதியை பார்த்தால் திருமண வாழ்க்கையே சொர்க்கத்தின் மறுபதிப்பே ஆகும். நவாம்ச லக்னமும், நவாம்ச லக்னாதிபதியும் வரக்கோத்மம் பெற்றாலும் இவ்வுலகில் திருமணம் ஓர்மணமாகி விடும்.

நவாம்ச லக்னமும், அதன் அதிபதியும் பாவிகளுக்கிடையே இருக்கக் கூடாது. அப்படி அமைந்தால் திருமண வாழ்க்கையில் என்றும் பிரச்சனை தான்.

நவாம்ச லக்னாதிபதி ஆட்சி, உச்சம், நட்பு வீட்டில் அமைவது சக்கரைப் பந்தலில் தேன் மாரி பொழிவது போல் அமையும்.

நவாம்ச லக்னமும், லக்னாதிபதியும் சுப கர்த் தாரியோகம் பெறும் அமைப்பு மணம் வீசும் மண வாழ்க்கையாம்.

நவாம்சத்தில் சுக்கிரன் வரக்கோத்மம், சுப கர்த்தாரி யோகம், ஆட்சி உச்சம் பெறுவது, சுபர் பார்வை பெறுவதும் யோகமே.

நவாம்ச லக்னத்தால்—3-6-7-10ம் அதிபதி கள் இருந்தால் கணவர் அல்லது மனைவி வக்கீல் தொழில் புரிபவராக இருப்பார்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் சுக்கிரன் இருப்பது திருமண வாழ்க்கை சிறப்படைவதில்லை.

7ம் அதிபதி நவாம்சத்தில் 6-8-12ல் இருப்பது திருமண வாழ்வில் மகிழ்ச்சி அடைய முடியாத நிலையாகும்.

நவாம்ச லக்னத்திற்கு7ல்—குரு, சந்திரன் இருந் தால் அழகுள்ள துணைவரை அடையும் யோக மாகும்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் சனி இருந்தால் துணைவர் முதுமையான தோற்றமுடையவர்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் செவ்வாய் இருந் தால் துணைவரின் உடலில் ஏதாவதொரு ஊனம் இருக்கும்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் சுக்கிரன் இருந்தால் அழகான மனைவியாம். ஆனால் அழகு ஆபத்தையும் தரும்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் சூரியன், அழகான மனைவி அமையும். ஆனால் குழந்தைச் செல்வத்திற்கு குறை ஏற்படும்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் சனி, ராகு, கேது இருந்தால் மனைவியின் உடலில் ஏதாவதொரு கோளாறு ஏற்படும்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் சந்திரன், சனி இருந்தால் விதவையை மணம்புரியும் நிலையாகும்.

6ம் அதிபதி அம்சத்தில் உபய ராசியில் இருந்தால் விவாகரத்து செய்து பின் திருமணம் செய்து கொள்வார்.

4ம் அதிபதி அம்சத்தில் எங்கு இருக்கிறாரோ அந்த வீட்டின் அதிபதி 7ம் இடத்திற்கு 2-5ம் அதிப்திகளுடன் சம்பந்தம் பெற்றால் யோகமான மனைவி அமைவார்.

7ம் அதிபதி புதன் நவாம்சம் பெற்று நவாம்சத்தில் புதனால் பார்க்கப்பட்டால் மனைவியின் ஒழுக்கத்திற்கு களங்கம் ஏற்படும்.

நடைபெறும் தசாபுத்தி காலங்களில் நவாம்சத்தில் அந்த கிரகங்கள் 6/8 ஆக அமைந்தால் அப்பொழுது நடைபெறும் திருமணம் சிறப்படைவதில்லை.

நவாம்சத்தில் 8ம் பாவம் அல்லது சுக்கிரனுக்கு 2மிடம் 11ம் அதிபதிக்கு தொடர்பு கொண்டால் மனைவி மூலம் திருமணத்தால் செல்வம்பெறலாம்.

10ம் அதிபதி இருக்கும் நவாம்சத்தின் அதிபதி ராசியில் 11ம் அதிபதியுடன் 11ல் இருப்பது கோடீஸ்வர யோகமாகும்.

10ம் அதிபதி இருக்கும் நவாம்சாதிபதி ராசியில் 2ல் இருப்பது லட்சாதிபதி யோகமாகும்.

10ம் அதிபதி நவாம்சத்தில் இருக்கும் ராசிக்கு திரிகோணத்தில் 3-8-11க் குறியவர்கள் வரும் பொழுது தாய்க்கு உடல் நலம் பாதிப்பு அல்லது மாமனாருக்கு உடல் நலம் பாதிப்பு ஏற்படும். தொழில் துறையில் நஷ்டமும் ஏற்படலாம்.

நவாம்சத்தில் 8ம்பாவம் மேஷமானால்-நெருப்பால், விஷத்தால் துன்பம் ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம் பாவம் ரிஷபமானால், மன அமைதி கெடும். மூளையில் கோளாறு ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம் பாவம் மிதுனமானால் ஆஸ்துமாவினால் துன்பப்படுவார்.

நவாம்சத்தில் 8ம்பாவம் கடகமானால் வயிற்று வலி, வாயுவினால் தொல்லை ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம்பாவம் சிம்மமானால், ஆயுதத்தால் விபத்து ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம்பாவம் கன்னியானால், சண்டையில் ஆபத்தும் வயிற்றுவலியும் ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம்பாவம் துலாமானால் காய்ச்சல் வரும்.

நவாம்சத்தில் 8ம் பாவம் விருச்சிகமானால், வயிற்றுப்போக்கு, அனிமியா வாயால் துன்பப்படுவார்.

நவாம்சத்தில் 8ம்பாவம் தனுசானால், ஆயுதத்தால் துன்பம் ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம்பாவம் மகரமானால், பாம்பு, மிருகங்களால் ஆபத்து ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம்பாவம் கும்பமானால், ஆயுதத்தால் ஆபத்து ஏற்படும்.

நவாம்சத்தில் 8ம்பாவம் மீனமானால் இயற்கைக்கு மாறான மரணம் ஏற்படும்.

**நவாம்சமும் கோசாரமும் :**

1. 8ம் அதிபதி நவாம்சத்தில் இருக்கும் ராசிக்கு 1-5-9ல் கோசார சனி வரும் காலம் உடல் நலம் பாதிக்கப்படும்.
2. 6ம் அதிபதி நவாம்சத்தில் இருக்கும் ராசிக்கு 1-5-9ல் கோசார சனி வரும் காலம் உடல் நலமும் பாதிக்கும். மாரகதசாபுத்திகள் நடைபெறுமானால் ஆயுளுக்கு கண்டம்கூட ஏற்படலாம்.
3. எந்த பாவத்தின் அதிபதி அம்சத்தில்இருக்கும் ராசியில் வரும் பொழுது அந்த பாவத்திற்கு பாதகத்தை தரும்.

உதாரணமாக 5ம் அதிபதி இருக்கும் அம்சத்தில் கோசார சனி வரும் காலம் குழந்தை செல்வங்களுக்கு உடல் நலம் பாதிக்கும்.

4. 7ம் அதிபதி இருக்கும் நவாம்ச ராசியில் கோசார சனி வரும் காலம் அயல்நாடு செல்லும் யோகம் அமையும். (அவருக்கு வெளிநாடு செல்லும் யோகம் உடையவரானால்)

5. 10ம் அதிபதி இருக்கும் நவாம்ச ராசியில் கோசார சனிவரும் காலம் உத்யோகம் அமையும். உத்யோக உயர்வு கிடைக்கும்.

6. 11ம் அதிபதி இருக்கும் நவாம்ச ராசியில் கோசார சனி வரும் காலம் செய் தொழிலால் உத்யோகத்தால் லாபம் கிடைக்கும்.

7ம் அதிபதி நவாம்சத்தில் இருக்கும் நிலையைப் பொருத்து வாழ்க்கைத் துணைவரின் அழகு தோற்றம் அமையும்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் குரு+சந்திரன்—ரதிக்கொப்பான அழகுடைய மனைவி வாய்ப்பாள்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் புதன் இருந்தால் உயர்கல்வி பெற்ற துணைவர் கிடைக்கும் யோகம்.

நவாம்ச லக்னத்திற்கு 7ல் ராகு—பெண்கள் ஜாதகத்தில் இருந்தால் இளமையில் விதவை அல்லது கணவரை விட்டுப் பிரிந்து சென்றுவிடுவார்.

சுக்கிரன் இருக்கும் நவாம்சாதிபதி செவ்வாய் அல்லது சனியுடன் கூடினால் அந்நிய மதப்

பெண்ணை மனைவியாக அல்லது கணவராக அடைவார். நவாம்சத்தில் 7ம் அதிபதி உச்சம் பெற்றால் பல பெண்கள் தொடர்பு உண்டாகும்.

நவாம்சத்தில் 7ம் அதிபதியும் கேதுவும் இணைந்து இருந்தால் மனைவி (அ) கணவர் அயல்நாட்டில் பிறந்தவராவார் அல்லது அந்நிய நாட்டு குடியுரிமை பெற்றவர்.

**மாடிவீட்டுச் சீமானா?**

நவாம்ச லக்னத்திற்கு 4ல் சந்திரன், சுக்கிரன் —மாடிவீட்டில் வசிப்பவர்.

நவாம்ச லக்னத்திற்கு 4ல் உச்சம் பெற்ற கிரகம் இருப்பது பங்களாவாசியாவார்.

நவாம்ச லக்னத்திற்கு 4ல் ராகு, சூரியன் பலம் பெறுவது அழகான வீடு அமையும்.

நவாம்ச லக்னத்திற்கு 4ல் கேது, செவ்வாய் இருப்பது சாதாரணமான வீடு அமையும்.

**நவாம்சமும் பெண்களும் :**

1. சுக்கிரன் சனியின் வீட்டில் நவாம்சத்தில் இருந்தாலும், சனி சுக்கிரன்வீட்டில் நவாம்சத்தில் இருந்தாலும், நவாம்சத்தில் ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டாலும் அந்த பெண்ணிற்கு சிற்றின்ப உணர்வு அதிகமாக இருந்து, பலருடன் இதன் காரணமாக தொடர்பு கொள்ளும் நிலை ஏற்படலாம்.

2. சுக்கிரன் நவாம்சத்தில் செவ்வாயின் வீட்டில் இருந்தாலும் அல்லது செவ்வாய், சுக்கிரன் இணைந்து நவாம்சத்தில் எங்கிருந்தாலும் சிற்றின்ப வேட்கையால் உடற்பசியை தீர்த்துக்கொள்ள பல ஆண்களுடன் தொடர்பு கொள்வார்.

3. சூரியன், சந்திரன் இணைந்து 7ம் பாவத்தில் ராசியில் அல்லது நவாம்சத்தில் இருந்தால் கணவன் ஒப்புதலுடன் பலருடன் உடல்உறவு கொள்ளும் நிலை ஏற்படும்.

4. நவாம்சத்தில் 7ம் வீடு செவ்வாய் வீடாக அமைந்து சனியினால் பார்க்கப்பட்டால் பெண்ணின் உடல்உறவு உறுப்பு பாதிக்கப் பட்டிருக்கும்.

ஆனால் நவாம்சத்தில் 7ம் வீடு, குரு, சுக்கிரன், புதன் வீடாக அமைந்து சுபக்கிரகம் இருந்து சுபரால் பார்க்கப்பட்டால் கணவனால் மிகவும் விரும்பப்படும் உடல் அமைப்புடையவர். உடல்உறவில் உச்சகட்டத்திற்கே செல்வார்கள்.

5. பெண்களின் ஜாதகத்தில் நவாம்சத்தில் 7ம் பாவம் சனியின் வீடாக அமைந்தால் கணவர் வயதானவராக அமைவார்.

6. மேஷம் அல்லது விருட்சிகமாக 7ம் பாவம் நவாம்சத்தில் அமைந்தால் கணவர் பலபெண்களுடன் தொடர்பு கொள்வார்.

7. ரிஷபம் அல்லது துலாம் 7ம் பாவமாக நவாம்சத்தில் அமைந்தால் கணவர் அழகானவராக நல்ல குணமுடையவராக அமைவார்.

8. மிதுனம் அல்லது கன்னி 7ம் பாவமாக நவாம்சத்தில் அமைந்தால் கணவர் அறிவாற்றல் பெற்றவராக, பல பட்டங்களை உடையவராக அமைவார்.

9. கடக நவாம்சம் 7ம் இடமாக அமைந்தால் கணவர் இரக்க குணமுடையவர்.

10. குருவின் வீடு 7ம் இடமாக நவாம்சத்தில் அமைந்தால் கணவர் ஒழுக்கசீலராக, உயர் குணமுடையவர்.

11. சிம்மம் 7ம் வீடாக நவாம்சத்தில் அமைந்தால் கணவர் பல வியாபார நிறுவனங்களுக்கு தலைவராகவும், பல பெண் நண்பர்கள் உடையவராகவும் இருப்பார்.

12. ராசிக்கு 7ம் இடம், நவாம்சத்திற்கு 7ம் இடம் இதில் எது பலமிக்கதோ அதைக் கொண்டே பலன் சொல்ல வேண்டும் என்பது ஜோதிடம் அறிந்த பெரியோர்களின் கருத்தாகும். உதாரணமாக 7ம் பாவத்தில் ராசியில் நீச்சம்பெற்ற கிரகம் இருந்து நவாம்சத்தில் 7ம் பாவத்தில் ஆட்சி, உச்சம்பெற்ற கிரகம் இருக்குமானால் நவாம்சத்திற்கு 7ம் இடத்தைக் கொண்டே பலன் அறிய வேண்டும்.

### 3. திரேக் காணம்

ஒரு ராசியை அதாவது 30° பாகையை மூன்று பாகமாக பிரிப்பதற்கு திரேக்காணம் என்று பெயர். 1 பாகம் 10°.

முதல் திரேக்காணம் 0-10° வரை

இரண்டாவது திரேக்காணம் 10.01-20° வரை

மூன்றாவது திரேக்காணம் 20.01-30° வரை.

முதல் திரேக்காணாதிபதி அந்தக் கிரகம்இருக்கும் ராசிக்கதிபதி.

இரண்டாவது திரேக்காணாதிபதி அந்தக் கிரகம் இருக்கும் ராசிக்கு 5ம் வீட்டின் அதிபதி.

மூன்றாவது திரேக்காணாதிபதி அந்தக்கிரகம் இருக்கும் ராசிக்கு 9ம் வீட்டின் அதிபதி. கீழே குறிப்பிடப்பட்டுள்ள பகுதி உடலில் உள்ள உறுப்புகளைக் குறிப்பதாகும்.

| | முதல் திரேக்காணம் | 2வது திரேக்காணம் | 3வது திரேக்காணம் |
|---|---|---|---|
| முதல் பாவம் | தலை | கழுத்து | அடி வயிறு |
| 2ம் பாவம் | வலது கண் | வலது தோள் | ஜெனன உறுப்புகள் |
| 3ம் பாவம் | ,, | வலது கை | வலது விரைப் பகுதி |

| | | | |
|---|---|---|---|
| 4ம் பாவம் | வலது மூக்கு | வலது பகுதி | வலதுதுடை |
| 5ம் பாவம் | வலது கன்னம் | வலது இருதயம் | வலது முழங்கால் |
| 6ம் பாவம் | வலது தாடை | வலது மார்புப் பகுதி | வலது புறங்கால் சதை |
| 7ம் பாவம் | வாய்ப் பகுதி | முகம் | கால் |
| 8ம் பாவம் | இடது தாடை | இடது மார்புப் பகுதி | இடது புறங்கால் சதை |
| 9ம் பாவம் | இடது கன்னம் | இடது இருதயப் பகுதி | இடது முழங்கால் |
| 10ம் பாவம் | இடதுமூக்கு | இடதுபகுதி | இடது துடை |
| 11ம் பாவம் | இடது காது | இடது கை | இடது விரைப் பகுதி |
| 12ம் பாவம் | இடது கண் | இடது தோள் பகுதி | மலத் துவாரம் |

மேலே கண்ட பகுதிகளில் பாவிகள் இருப்பார்களானால் அதற்குறிய உடல் பகுதி பாதிக்கப்படும். ஆனால் சுபக் கிரகம் அந்தப்பகுதியைப்பார்த்தால் பாதிப்பு அதிகம் ஏற்படாது. பாவிகளும், சுபர்களும் இறந்தால் பாதிக்கப்பட்டு, பின் நிவாரணம் கிடைக்கும்.

**ஆயுத திரேக்காணம்:**

சிம்மம், மேஷம், தனுசு, துலாம், மிதுனம் இந்த ராசிகளின் மூன்றாவது திரேக்காணம்.

மேஷம், சிம்மம் இவற்றின் முதல் திரேக்காணம்.

கன்னி, மிதுனம் இவற்றின் இரண்டாவது திரேக்காணம். இந்தத் திரேக்காணத்தில் உள்ள கிரகம் நலம் தரும் அமைப்பில் இருப்பதில்லை.

பாச திரேக்காணம் :

விருட்சிகத்தின் இரண்டாவது திரேக்காணம் நன்மை தருபவை.

நிகள திரேக்காணம் :

மகரத்தின் முதல் திரேக்காணம் - நன்மை தருபவை.

சர்ப்ப திரேக்காணம் :

விருட்சிக ராசியில் முதல் திரேக்காணம்.

கடக ராசியில் மூன்றாவது திரேக்காணம்.

மீன ராசியில் மூன்றாவது திரேககாணம்.

ஒரு பாவத்தின் திரேக்காணாதிபதி ஆட்சி, உச்சம் பெற்ற நிலையில் அமைந்தால் ராஜயோகம் தரும்.

சந்திரன் - குரு - புதன் - சுக்கிரனின் திரேக்காணாதிபதியானால் அழகானவராக, அறிவாற்றல் உடையவராக, ஒழுக்கமுடையவராக, செல்வச் சிறப்புடையவராக அமைவார்.

லக்னத்தில் இருந்து 22வது திரேக்காணம் ஒருவரின் இறப்பைக் குறிக்கும். கணிப்பதற்கு உதவி செய்யும் பகுதியாகும்.

**செல்வச் சிறப்பை அறிய :**

2ம் பாவத்தின் திரேக்காணாதிபதியையும், 4வது திரேக்காணாதிபதியையும் ஆராய்ந்து அறியலாம்.

**புத்தி கூர்மை, கல்விச்செல்வம் அறிய :**

13வது திரேக்காணத்தையும், 5ம் பாவத்தின் திரேக்காணாதிபதியையும் ஆராய்ந்து அறிய வேண்டும்.

**எதிர்பாராத செல்வம் பெற முடியுமா?**

2ம் பாவத்தின் அல்லது 11ம் பாவத்தின் திரேக்காணாதிபதி பலம் பெற்றால் அவர்கள், ஆட்சி, உச்சம் பெற்றால் பரிசுச் சீட்டில், ரேசில் பல லட்சங்கள் பெறலாம்.

| | | | |
|---|---|---|---|
| சுக் | சனி | சூரி புதன் ராகு | லக் செவ் நெப் |
| | ராசி 19-5-1910 | | |
| யுரா 2° 25 | | | |
| | கேது | | சந் குரு |

**கோட்சேயின் ஜாதகம் :**

லக்னம் மிதுனம் 8°. 22வது திரேக்காணம் மகரத்தின் முதல் திரேக்காணம். முதல் திரேக்காணமாவதால் மகரத்தின் அதிபதி சனியே அதன் திரேக்காணாதிபதி. சனி-யுரானஸ் 4/10 ஆக அமைவது. 22வது திரேக்காணத்தில் மிக கொடிய பாவியாகிய யுரானஸ் இருப்பது. லக்னம்

செவ்வாய் நெப்டியூனுக்கு இடையில் அமைவது. இந்தக் காரணங்களால் பாரதத்தின் தந்தை மகாத்மா அவர்களை சுட்ட காரணத்தால் ஜெயில் வாசம் பெற்று, தூக்குத் தண்டனை பெற்று தன் வாழ்வை முடித்துக் கொள்ளும் நிலை ஏற்பட்டது.

1. மேலும் 22ம் திரேக்காணாதிபதி செவ்வாய்க்கு அல்லது பாவிகளுக்கு 4-7-10 ஆக அமையுமானால் நெருப்பால், ஆயுதத்தால், இயற்கைக்கு மாறான இறப்பைப் பெறுவார்கள் என்பது விதியாகும்.

2. சந்திரன் 6-8-12ல் பலமற்று-குரு-புதன்-சுக்ரனின் திரேக்காணத்தில் இருப்பாரானால்-இளமையில் ஏற்படும் கண்டங்கள் நீங்கி நீண்ட ஆயுளைப் பெறுவார்.

3. லக்னத்தின் திரேக்காணாதிபதி 9ம் பாவத்திற்கு சம்பந்தம் ஏற்பட்டால் அயல்நாடு செல்லும் யோகம் அமையும்.

4. 9ம் பாவம், 10ம் பாவத்தின் திரேக்காணாதிபதி இணைந்து 7ம்பாவத்திற்கு சம்பந்தம் ஏற்படுமானால் திருமணத்தால்அதிஷ்ர்டம்பெறும் யோகம்.

5. 2ம் பாவத்தின் திரேக்காணாதிபதி 11ம் வீட்டிற்கு சம்பந்தம் ஏற்பட்டால் எதிர்பாராத செல்வச் சிறப்பை பெறும் யோகமாகும்.

உதாரணம் 2 : லாட்டரிச் சீட்டில் லட்சங்கள் பெற்றவரின் ஜாதகம் :

| | | | |
|---|---|---|---|
| சு-ச சூ-பு | ராகு | குரு | |
| செ | ராசி 30-3-1930 | | |
| | | | |
| சனி | லக் | கே | |

| | |
|---|---|
| லக்னம் | 22.30 |
| சனி | 18.33 |
| செவ்வாய் | 17.40 |
| சுக்கிரன் | 29.0 |
| சந்திரன் | 22.25 |
| சூரியன் | 16.25 |
| புதன் | 14 00 |
| ராகு | 11.18 |
| குரு | 18.36 |

1. 2ம் பாவம் தனுசு 22.30°. அதன் திரேக்காணம் அதற்கு 9ம் பாவத்தின் அதிபதி சூரியன். சூரியன் 2ம் இடத்தின் திரேக்காணாதிபதியாகி லக்னத்திற்கு 5ல், (9-11ம் அதிபதிகளுடன் இணைந்து) இருந்ததால் சூரியதஸாவில் 2½ லட்சம் லாட்டரி சீட்டில் பரிசு பெற்றார்.

2. லக்னத்தின் திரேக்காணாதிபதி சந்திரன் 5ல் அமைந்தது அதிர்ஷ்டம் பெறும் யோகமாகும்.

3. 4ம் பாவத்தின் திரேக்காணாதிபதி சுக்கிரன் 5ல் உச்சம்பெற்ற நிலையில் உள்ளதால் வீடு, கார், வசதியான வாழ்க்கையைப் பெற்றார்.

4. 2ம்பாவத்தின் திரேக்காணாதிபதி 5-9-11ம் இடங்களுக்கு தொடர்பு கொண்டால் அதன் தசா, புத்திகளில் எதிர்பாராத செல்வம் பெறலாம் என்பது விதியாகும்.

முன்னாள் பாகிஸ்தான் அதிபர் ஷியாவுல்ஹக் :
விமான விபத்தில் இறந்தவர்.

| | | | |
|---|---|---|---|
| | | | சுக் |
| செ ல-யு | 12-8-1924 ராசி | | சூரி நெ |
| | | | ரா புத |
| சந் | குரு | சனி | |

| | |
|---|---|
| லக்னம் | 14°.0 |
| செவ்வாய் | 10.10 |
| யுரானஸ் | 27.40 |
| சுக்கிரன் | 15.0 |
| சூரியன் | 26.50 |
| நெப்டியூன் | 27.25 |
| ராகு | 0.20 |
| புதன் | 23.15 |
| சனி | 4.30 |
| குரு | 17.16 |
| சந்திரன் | 26.30 |

லக்னத்தின் 22வது திரேக்காணம். கன்னியில் 2வது திரேக்காணம். இது ஆயுத திரேக்காணம். அதன் அதிபதி சனி. அதற்கு 10ல்—சூரியன் நெப்டியூன். இதனால் இயற்கைக்கு மாறான இறப்பை, விபத்தால் ஏற்படும் விபத்தைக் குறிக்கிறது.

22வது திரேக்காணாதிபதி சனி—காற்று ராசியில் இருப்பதால் ஆகாயத்தில் நடந்த விமான விபத்தில் ஏற்பட்ட விபத்தைக் குறிக்கிறது. சனி 9ல் சராராசியில் இருப்பதும், பிரயாணம் செய்யும் காலகட்டத்தில் விமானவிபத்து ஏற்பட்டு அதனால் உயிர்போன நிலையும் ஆனது என்பது குறிப்பிடத்தக்கது.

கோசார சனி — 22வது திரேக்காணாதிபதி (லக்னத்திற்கு) இருக்கும் ராசி, அம்சத்தில் அல்லது

அதற்கு 5-9ல் வரும் காலம் மாரக தசாபுத்தி நடைபெறுமானால் நிச்சயம் மாரகத்தைக் கொடுக்கும் என்பது விதியாகும்.

**திரேக்காணமும் உடன்பிறப்புகளும் :**

ஒருவருக்கு கிடைக்கும் சகோதர, சகோதரிகளைப்பற்றிய கருத்துக்களை, அவர்களால் ஏற்படும் நன்மை, தீமை, உறவுநிலை, அது பாதிக்கப்படும் நிலை இவைகளைக் குறிக்கும்.

திரேக்காண சார்ட்டில் 3ம் அதிபதி பலம் அடைந்தால், இளைய சகோதரரையும் அவர்களால் ஏற்படும் நன்மையையும் குறிக்கும். மேலும் திரேக்காணத்தில் 11ம் அதிபதி பலமடைந்திருந்தால் மூத்த உடன்பிறப்புக்கள் அவர்களால் ஏற்படும் நன்மை, உறவு இவைகளைக் குறிக்கும்.

**22வது திரேக்காணமும், இறப்பின் தன்மையும் :**

1. 22வது திரேக்காணாதிபதி (லக்னத்தின்) மேஷத்தில் 7°-8°க்குள் இருக்குமானால் விரைவில் கோபப்படுவார். தன் செயல்பாட்டினால் குற்றவாளியாக ஆக்கப்படுவார். அதனால் மிகவும் அவசரபுத்தியுடையவர். அதனால் பல விபத்துக்களை வாழ்க்கையில் சந்திக்கும் நிலை ஏற்படும்.

2. 22வது திரேக்காணாதிபதி விருச்சிகம் 12ல் இருந்தால் விபத்துக்களை சந்திப்பார். அத னால் இயற்கைக்கு மாறான இறப்பையும் சந்திக்கும் நிலை ஏற்படும். பகைவரால் பல இடையூறுகளை சந்திப்பார்.

3. 22வது திரேக்காணாதிபதி செவ்வாய்க்கு 4-7-10 ஆக அமைந்தால்—சுடப்பட்டோ, விபத் தாலோ இறக்கும் நிலை ஏற்படும்.

4. 22வது திரேக்காணாதிபதி சனியாகி, செவ் வாய் வீட்டில் நவாம்சத்தில் இருந்தாலும் அல் லது 22ம் திரேக்காணாதிபதி செவ்வாயாகி நவாம்சத்தில் சனி வீட்டில் இருந்தாலும் விபத் தால் இறப்பு ஏற்படும்.

5. 22வது திரேக்காணாதிபதி காற்று ராசியா கவோ, 9ம் பாவத்திலோ இருந்தால் பிரயா ணத்தில் மிகவும் கவனமாக இருக்கவேண்டும். இல்லையெனில் ஆபத்தை சந்திக்கவேண்டிய நிலை ஏற்படும்.

6. லக்னம் அல்லது 8ம் பாவத்தின் 22வது திரேக் காணம் சர்ப்ப, நிகளபாச திரேக்காணமா னால் இயற்கைக்கு மாறான இறப்பை சந்திக்க நேரிடும்.

**உலகவங்கியில் அயல்நாட்டில் அதிகாரியாக பணிபுரிபவர் :**

| | | | |
|---|---|---|---|
| | புத | சூரி | சுக் |
| கே | ராசி | | |
| செ | | | ரா |
| | குரு | லக் சனி | சந் |

| | |
|---|---|
| புதன் | 22.41 |
| சூரியன் | 1.42 |
| சுக்கிரன் | 14 26 |
| ராகு | 4.52 |
| சந்திரன் | 0.45 |
| லக்னம் | 5.35 |
| சனி | 4.26 |
| குரு | 24.56 |
| செவ்வாய் | 18.24 |
| கேது | 4.52 |

2ம் பாவத்தின் திரேக்காணம் விருட்சிகம் முதல் திரேக்காணம். அதன் அதிபதி செவ்வாய் உச்சம் பெற்று லக்னத்திற்கு 4ல்.

4ம் பாவத்தின் திரேக்காணம் மகரம். முதல் திரேக்காணம் அதன் அதிபதி சனி உச்சம். இதன் இரண்டு திரேக்காணாதிபதிகளும் உச்சம் பெற்றதால் உயர் உத்யோகம், செல்வம், வாகனம், புகழ் பெரும்நிலை ஏற்பட்டது.

**சுவாமி விவேகானந்தர் :**

சிறந்த அறிவாற்றல் பெற்று உலகப் புகழ் பெற்ற ஆன்மீகத் தலைவர்.

| | | | |
|---|---|---|---|
| | செ | கே | |
| | ராசி | | |
| புத சூ-சு | 12-1-1863 | | |
| லக் | ரா | குரு | சந் சனி |

| | |
|---|---|
| சூரியன் | 0.52 |
| சந்திரன் | 18.54 |
| செவ்வாய் | 7.46 |
| புதன் | 13.13 |
| குரு | 5.28 |
| சுக்கிரன் | 28.32 |
| சனி | 15.02 |
| ராகு | 23.41 |
| லக்னம் | 17.31 |

13வது திரேக்காணம் மேஷம் 2வது திரேக்காணம். அதன் திரேக்காணாதிபதி சூரியன். லக்னத்தின் 9வது ராசிக்கதிபதி. சூரியன், புதன் சுக்கிரனுடன் இணைந்து 2ல் இருப்பது சிறந்த அறிவாற்றலை, உலகப் புகழை, ஞானத்தை தந்தது.

திரேக்காண சார்ட்டில் சந்திரன் சொந்த, உச்ச, நட்பு வீட்டில் இருந்தால் நற்பலன்களைத் தரும்.

உதாரண ஜாதகத்தில் திரேக்காண சக்கரம் அமையும் நிலை

| | | | |
|---|---|---|---|
| கே | சுக் | சூ-கு செ | புத |
| சனி | திரேக்- | | |
| | காணம் | | சந் |
| | லக் | | ரா |

4. **திரிஸாம்ஸம்**

ஒரு ராசியில் 30ல் ஒருபாகம். 1பாகம் 1°ஆகும்
ஒற்றைப்படை ராசியில்
முதல் 5° செவ்வாய்க்குரிய திரிஸாம்ஸம்
5°.01-10° சனிக்குரிய ,,
10.01-18° குருவுக்குரிய ,,
18.01-25° புதனுக்குரிய ,,
25.01-30° சுக்கிரனுக்குரிய ,,
இரட்டைப்படை ராசியில்
முதல் 5° வரை சுக்கிரன் திரிஸாம்ஸம்
5 01-12°.0 புதன் ,,
12.01-20° 0 குரு ,,
20.01-25.0° சனி ,,
25 01-30.0 செவ்வாய் ,,

பெண்கள் ஜாதகத்தில் திரிஸாம்ஸம் மிக முக்கியமான பங்கு வகிக்கிறது.

(லக்னம் அல்லது சந்திரன் இவர்களில் யார் பலமிக்கவரோ அவரைக் கொண்டே பலன் அறிய வேண்டும் என்பது விதியாகும்)

1. லக்னம் அல்லது சந்திரன் செவ்வாயின் வீட்டில் இருந்து செவ்வாய் திரிஸாம்ஸத்தில் இருந்தால் தக்க வயதாகுமுன்பே பலருடன் உடல்உறவு கொள்ளும் நிலை ஏற்படும்.

   மேலும் சுக்கிரன் திரிஸாம்ஸத்தில் இருந்தால் வயது அடைந்தபின் பல ஆண்களுடன் உடல் உறவு கொள்வார்.

புதன் திரிஸாம்ஸத்தில் இருந்தால் புத்தி சாலியாகவும், கபடதாரியாகவும் உள்ளவராம்.

குரு திரிஸாம்ஸத்தில் இருந்தால் திறமைசாலி யாகவும், நல்ல குணமுடையவராம்.

சனி திரிஸாம்ஸத்தில் இருந்தால் மற்றவரிடம் வேலை செய்பவராக இருப்பார்.

2. லக்னம் அல்லது சந்திரன் சுக்கிரன் வீட்டில் இருந்து செவ்வாயின் திரிஸாம்ஸத்தில் இருந்தால் கெட்ட எண்ணம் உடையவர்.

சுக்கிரன் திரிஸாம்ஸத்தில் இருந்தால் சிறந்த செல்வம், கல்வி பெற்றவர்.

புதன் திரிஸாம்ஸத்தில் இருந்தால் இசைக் கலைஞராவார்.

குருவின் திரிஸாம்ஸத்தில் இருந்தால், நல்ல எண்ணம், சாந்த குணம் உடைய பெருந்தகையாளர்.

சனியின் திரிஸாம்ஸத்தில் இருந்தால் இரண்டு திருமணம் நடைபெறும்.

3. லக்னம் அல்லது சந்திரன் கடகத்திலிருந்து செவ்வாய் திரிஸாம்ஸம் பெற்றால் கற்புநிலை தவறுவார்.

சுக்கிரன் திரிஸாம்ஸம் பெற்றால் தவறான வழியில் செல்வார்.

புதன் திரிஸாம்ஸம்பெற்றால் கலைஆர்வமும், விஞ்ஞான அறிவும் அதில் பட்டமும் பெறுவார். குரு திரிஸாம்ஸம் பெற்றால் நல்ல பல குணங்களையுடையவர்.

சனி திரிஸாம்ஸம் பெற்றால் கணவனைத் தாக்கும் குணமுடையவர். மேலும் கணவனை கொலைகூட செய்வார்.

4, லக்னம் அல்லது சந்திரன் சூரியன் வீட்டில் இருந்து செவ்வாய் திரிஸாம்ஸம் பெற்றால் ஆண் தன்மை உடையவர். அதிகம் பேசுவார். சுக்கிர திரிஸாம்ஸம் பெற்றால் பல ஆண்கள் தொடர்புடையவர்.

புதன் திரிஸாம்ஸம் பெற்றால் அழகான பெண் தன்மையுடையவர்.

குரு திரிஸாம்ஸம் பெற்றால் செல்வந்தருக்கு மனைவியாவார்.

சனி திரிஸாம்ஸம் பெற்றால் மத மாற்றம் செய்து திருமணம் செய்து கொள்வார்.

5. லக்னம் அல்லது சந்திரன் தனுசு, மீனத்தில் இருந்து செவ்வாய் திரிஸாம்ஸம் பெற்றால் அழகான, நற்குணமுள்ள பெண்ணாவார்.

சுக்கிரன் திரிஸாம்ஸம் பெற்றால் பலருடன் தொடர்புடைய பெண்.

புதன் திரிஸாம்ஸம் பெற்றால் சிறந்த சினிமா, நாடக நடிகையாம்.

குரு திரிஸாம்ஸம் பெற்றால் பல நற்குணம் பெற்ற பெண்ணாவார்.

சனி திரிஸாம்ஸம் பெற்றால் உடல் உறவில் அதிக ஆர்வமில்லாதவர்.

6. லக்னம் அல்லது சந்திரன் மகர-கும்பத்தில் இருந்து செவ்வாய் திரிஸாம்ஸத்தில் இருந்தால் வேலைக்காரியாக இருப்பார்.

சுக்கிரன் திரிஸாம்ஸத்தில் இருந்தால் கெட்ட குணமுடையவர்.

குரு திரிஸாம்ஸத்தில் இருந்தால் அன்பான மனைவியாம்.

சனி திரிஸாம்ஸத்தில் இருந்தால் கீழ்த்தரமான ஆண்களுடன் தொடர்பு ஏற்படும்.

7. சந்திரன் கடகத்தில் குருவுடன் இருந்து இரண்டும் செவ்வாய் திரிஸாம்ஸத்தில் இருந்தால் பல காதலர்களை உடையவர்.

குரு மட்டும் கடகத்தில் இருந்து செவ்வாய் திரிஸாம்ஸத்தில் இருந்தால் பல செல்வந்தர்களின் தொடர்பு உண்டாகும்.

செவ்வாய் கடகத்தில் இருந்து செவ்வாய் திரிஸாம்ஸத்தில் இருந்தால் பலருக்கு மனைவியாவார்.

8. மேஷத்தில் சனியும் சந்திரனும் இருந்து இரண்டும் செவ்வாய் திரிஸாம்ஸம் பெற்றால் தாசித் தொழில் புரிவார்.

9. லக்ஷணம் அல்லது சந்திரனுக்கு 7ல் சனி அல்லது புதன் இருந்தால் கணவரின் விந்துவில் உயிர் அணு இல்லாதவர். அதாவது பிள்ளை பெறும் தகுதி அற்றவர் (Impotent).

10. பெண்ணின் ஜாதகத்தில் 7ம் இடம் சர ராசியானால் கணவர் எப்பொழுதும் பயணம் செய்து கொண்டே இருப்பார்.

ஸ்திரராசியானால் கணவரும், மனைவியும் ஒரே வீட்டில் ஒன்றாக வசிப்பார்கள்.

உபயராசியானால் சில நாட்கள் பிரயாணம் செய்தும் சில நாட்கள் மனைவியோடு வீட்டில் தங்கும் நிலையை உடையவர்.

11. பெண்ணின் ஜாதகத்தில் 7ம் வீட்டில் சூரியன் பலமற்று இருந்து சுபர் சம்பந்தமின்றி இருந்தால் கணவரால் ஒதுக்கி வைக்கப்படுவார் அல்லது பிரிந்து வாழும் நிலை ஏற்படலாம்.

திரிஸாம்ஸ லக்னாதிபதி பலம் பெற்றால் இறப்பு துன்பமில்லாமல் இருக்கும். நிம்மதியான இறப்பாக இருக்கலாம்.

உதாரண ஜாதகத்தில் கிரகங்களின் திரிஸாம்ஸ நிலை வருமாறு :

1. சூரியன் ரிஷபத்தில் 5°.14 இரட்டைப்படை
ராசி - புதன் திரிஸாம்ஸம்

2. சந்திரன் தனுசுவில் 28.08 ஒற்றைப்படை
ராசி - சுக்கிரன் திரிஸாம்ஸம்

3. செவ்வாய் ரிஷபத்தில் 5.26 இரட்டைப்படை
ராசி - புதன் திரிஸாம்ஸம்

4. புதன் மிதுனத்தில் 6°.14 ஒற்றைப்படை
ராசி - சனி திரிஸாம்ஸம்

5. குரு கன்னியில் 20.19 இரட்டைப்படை
ராசி - சனி திரிஸாம்ஸம்

6. சுக்கிரன் மேஷத்தில் 5.14 ஒற்றைப்படை
ராசி - சனி திரிஸாம்ஸம்

7. சனி கும்பத்தில் 4.52 ஒற்றைப்படை
ராசி - செவ்வாய் திரிஸாம்ஸம்

8. ராகு மகரத்தில் 20.33 இரட்டைப்படை
ராசி - சனி திரிஸாம்ஸம்

9. லக்னம் மீனத்தில் 27.44 இரட்டைப்படை
ராசி - செவ்வாய் திரிஸாம்ஸம்.

5 தஸாம்ஸம் :

ஒரு ராசியில் 10ல் ஒரு பாகம் 1 பாகம்=3°

ஒற்றைப்படை ராசியானால் தான் இருக்கும் இடத்தில்இருந்தும், இரட்டைப்படை ராசியானால் தான் இருக்கும் இடத்திற்கு 9ம் இடத்தில் இருந்தும் ஆரம்பித்து கணக்கிட வேண்டும். தஸாம்ஸத்தின் உதவியைக் கொண்டு ஒருவரின் வாழ்க்கை நிலை, உத்யோகம் அமையும், அதுவும் உயர் நிலை உடையதா, சொந்தமாக தொழில் துவங்கிடும் முதலாளியா, அதனால் லாபம் பெறும் நிலையா, அயல்நாடு செல்லும் யோகமா, அயல் நாட்டில் கல்வி பெறும் தகுதியா இவைகளையும் அறியலாம்.

1. தஸாம்ஸ சார்ட்டில் உள்ள லக்னத்தை சனி, சுக்கிரன் பார்த்தால் தொழிற்கல்வி கற்கும் யோகம் அமையும்.
2. அந்த லக்னத்தை குரு பார்த்தாலும் தொழிற் கல்வி கற்கும் நிலை ஏற்படும்.
3. தஸாம்ஸ லக்னத்தில் சனி, செவ்வாய் இருந்து புதன், சூரியன், ராகு, சுக்கிரன் பார்த்தால் டாக்டராகலாம்.
4. தஸாம்ஸ லக்னாதிபதி உச்சம் பெற்று, சூரியன், குருவால் பார்க்கப்பட்டால் டாக்டராகலாம்.
5. தஸாம்ஸ லக்னத்தில் சூரியன், செவ்வாய் இருந்து, தஸாம்ஸ லக்னாதிபதி ஆட்சி உச்சம் பெற்றால் மருத்துவராகலாம்.

6. சூரியன்-சந்திரன்-செவ்வாய்-குரு தஸாம்ஸத்தில் 10ம் இடத்திற்கு சம்பந்தப்பட்டால் அதிகாரம் செய்யும் (Administrative Post) தகுதி வாய்ந்த வேலை அமையும்.

7. சுக்கிரன்-சனி-புதன் சம்பந்தம் ஏற்பட்டால் தொழிற்கல்வி அமையும்.

8. தஸாம்ஸத்தில் கீழ்கண்ட கிரகங்களின் ஆதிக்கம் 10ம் இடத்திற்கு ஏற்படும்பொழுது ஏற்படும் பலன்கள் வருமாறு:

1. சூரியனாகில் I.A.S., I.P.S. அதிகாரியாகலாம். டாக்டர் தொழில் புரியலாம். செகரட்டரி போன்ற பதவிகள் கூட பெறலாம்.

2. சந்திரனாகில் - உயர் அரசு அதிகாரியாகலாம் அரசியல் தொடர்பு ஏற்பட்டு அரசியல் தலைவராகலாம். ஹோட்டல், தங்கும் விடுதிகள் நடத்தலாம்.

3. செவ்வாயானால் - இராணுவம், போலீஸ் அதிகாரியாக பணிபுரியலாம். நெருப்பு, மெட்டல், மெக்கானிக்கல் சம்பந்தமான இஞ்சீனியராகலாம். டாக்டராக, சிறப்பு அறுவைச் சிகிச்சை மருத்துவராகலாம்.

4. புதனாகில்-கணக்கு பேராசிரியராக, ஆலோசகராக, ஆடிட்டராக, இஞ்சீனியராக, டிசையினராக பணியாற்றலாம்.

5. குருவானால் - அமைச்சராக, நீதிபதியாக, அரசு ஆணையிடும் அதிகாரியாக, பேராசிரியராக, வக்கீலாக, நீதித்துறை ஆலோசகராக கமிஷன் ஏஜெண்டாக பணிபுரியலாம்.

6. சுக்கிரனாகில் - மருந்து தயாரிப்பாளராக கலைஞராக, இசை, நாடக,சினிமா சம்பந்தப் பட்ட தொழில் புரிபவராக, நடிகராக, உணவு விடுதி நடத்துபவராக, பெண்கள் அழகு சாதனபொருட்கள் தயாரிப்பாளர்-விற்பனை யாளராக, எலக்ட்ரானிக் தொழில், பொருள் சம்பந்தமான தயாரிப்பாளராக பணிபுரியும் வாய்ப்பு பெறலாம்.

7. சனியானால் - தொழிலாளர் தலைவராக, தோல்பொருள் தயாரிப்பு விற்பனையாளராக, மில் முதலாளியாக, தொழிலாளர்கள் அதிகம் பணியாற்றும் தொழிற்கூடம் நடத்துபவராக ஆகலாம்.

8. ராகுவானால் - மருந்து தயாரிப்பவராக விற்பனையாளராக, எலக்ட்ரானிக் தொழில் நடத்துபவராக அமையலாம்.

9. கேதுவானால் - சிறந்த மாஜிக் நிபுணராக, போதகராக, ஜோதிடராக அமையலாம்.

உதாரணம் :

| | | | |
|---|---|---|---|
| | குரு | சுக் | |
| | ராசி | | கே |
| சந் ரா | | | |
| | | செ | லக் ச,பு |

| | | | |
|---|---|---|---|
| | செ | சந் | ரா |
| | தஸாம்ஸம் | | |
| குரு சுக் | | | |
| சனி கே | | புத | லக் சூரி |

தஸாம்ஸத்தில் : சூரியன் லக்னத்தில் இருந்து 10ம் இடத்தைப் பார்ப்பதாலும், சனியும் 10ம் இடத்தைப் பார்ப்பதாலும், ராகு, கேது 10ம் இடம் சம்பந்தம் பெறுவதாலும், செவ்வாயும் 10ம் அதிபதி புதனைப் பார்ப்பதாலும் இன்ஜீனியர் பட்டம் பெறும் வாய்ப்புப் பெற்றார். (செவ்வாய், சனி, புதன், சூரியன் 10ம் இடம் சம்பந்தம் பெறுவது) மேலும் குருவின் பார்வை சூரியனுக்கு லக்னத்திற்கு, அதனால் M. B. A. பட்டமும் பெறும் தகுதி அடைந்தார்.

தஸாம்ஸமும், அயல்நாட்டில் உயர்கல்வி பெறும் யோகமும்

தஸாம்ஸத்தில் கீழ்கண்ட கிரக சேர்க்கைகள் இருக்குமானால் அயல் நாட்டில் உயர் கல்வி பெறும் யோகம் அமையும்.

1. 5-9ம் அதிபதிகளின் சம்பந்தம்

2. 9 அல்லது 12ம் அதிபதி 4ம் இடம் அல்லது 4ம் அதிபதிக்கு தொடர்பு கொள்வது.

3. 10ம் அதிபதிக்கும் 6ம் அதிபதிக்கும் உள்ள சம்பந்தம்.

4. 5 - 9 - 12ம் அதிபதிகள் ஒன்றுக்கொன்று தொடர்பு கொள்வது.

5. 7-9-12ம் அதிபதிகள் 5ம் பாவம் அல்லது 5ம் அதிபதிகளுடன் தொடர்பு கொண்டால் அயல் நாட்டில் உதவித்தொகை பெற்று உயர்கல்வி பெறும் யோகம் அமையும்.

உதாரணம் :

பாரதத்தின் ஒப்பற்றதலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்களின் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| | ராசி 11-10-1902 இறப்பு 15 4-1973 | | செ |
| குரு சந் | | | |
| லக் சனி | | ரா பு(வ) | சுக் சூரி |

| | | | |
|---|---|---|---|
| | லக்க கேது | | |
| | தஸாம்ஸம் | | |
| குரு சூரிய புதன் | | | செவ் |
| சந் | | ராகு | சுக்கி சனி |

| | | | |
|---|---|---|---|
| லக்னம் | 13°.11 | செவ்வாய் | 0.02 |
| சனி | 28°.57 | சுக்கிரன் | 12°.11 |
| குரு | 14°.50 | சூரியன் | 24.29 |
| சந்திரன் | 11.34 | ராகு | 2°.40 |
| கேது | 2.40 | புதன் (வ) | 11.09 |

தஸாம்ஸத்தில்

7ம் அதிபதி-சுக்கிரன்

9ம் அதிபதி-குரு

12ம் அதிபதி-குரு

9-12ம் அதிபதி குரு 5ம் அதிபதி சூரியனுடன் இணைந்து 10ல் இருந்து 7ம் அதிபதி சுக்கிரனைப் பார்ப்பது.

9ம் அதிபதி குரு 10ம் அதிபதி சனியைப் பார்ப்பதும். இதன் காரணங்களால் அயல் நாடு சென்று, உதவித் தொகை பெற்று உயர்கல்வி பெறும் யோகம் அமைந்தது.

(மற்ற யோகம் அமைந்தாலும் 9-10ம் அதிபதி களுக்குள்ள சம்பந்தம் இல்லாமல் இருந்தால் அயல்நாடு சென்றாலும் அதனால் பயன் பெற இயலாது. அதனால் 9-10ம் அதிபதிகளின் சம்பந்தம் இருப்பதே சிறந்ததாகும்.)

2. ராசியில் லக்னத்திற்கு 10ம் அதிபதி புதன் தஸாம்ஸத்தில் லக்னத்திற்கு 10ல்

அமைந்ததால் பாரத நாட்டில் அரசியல் உலகில் மிக உன்னதமான, போற்றப்படும் தலைவர் என்பதை குறிப்பதாகும்.

உதாரணம் : 2

அயல்நாட்டு குடிமகனை காதலித்து திருமணம் செய்துகொண்டு அமெரிக்காவில் தங்கி அந்த நாட்டு பிரஜையான பெண் ஜாதகம்.

| | | | |
|---|---|---|---|
| | செ | சந் கே | |
| புத சூரி | ராசி | | |
| | | | |
| லக் | சனி ரா | | குரு (வ) |

| | | | |
|---|---|---|---|
| | | புத | சுக் குரு |
| சந் | தஸாம்ஸம் | | ரா |
| செ ச கே | | | |
| லக் | | | சூரி |

லக்னம் 261°, சூரியன் 323, சந்திரன் 34, செவ்வாய் 29°, புதன் 312 குரு (வ) 154, சுக்கிரன் 314 சனி 231 ராகு 210.08

1. தஸாம்ஸத்தில் 9ம் அதிபதி சூரியன் 10ல் இருந்து 4ம் இடத்தை பார்ப்பது (4-9 சம்பந்தம்)

2. 9ம் அதிபதி சூரியன் 10ல் இருந்து 6-11ம் அதிபதி சுக்கிரனைப் பார்ப்பது. (6-9-10ம் வீட்டின் சம்பந்தம்)

3. 10ம் அதிபதி புதன் 12ம் இடத்தைப் பார்ப்பது (10-12ம் வீட்டின் சம்பந்தம்)

படிக்கும் காலத்தில் அயல் நாட்டு மாணவரை காதலித்து திருமணம் செய்து கொண்டு அமெரிக்காவில் தங்கியுள்ள பெண்ணின் ஜாதகம். மேலே கண்ட காரணங்களால் தஸாம்ஸத்தில் ஏற்பட்டதால் அயல்நாடு சென்று அங்கேயே தங்கும் நிலை ஏற்பட்டது.

அடிக்கடி அயல்நாடு செல்லும் யோகமா?

(மேலைநாட்டு முறை)

M. C. ( 10ம் பாவத்தின் ) ன் நவாம்ச ராசி அல்லது அதன் அதிபதி சர ராசியானாலும், அல்லது அவை நீர் அல்லது காற்று ராசியில் இருந்தாலும், அல்லது அதன் அதிபதி யுரானஸ் அல்லது சந்திரனுக்கு திரிகோணமாக ராசியில் அமைந்தாலும் அடிக்கடி அயல்நாடு சென்று வருவார் என்பது மேலை நாட்டு விதிமுறையாகும்.

**உதாரணம்: பாரத ரத்னா ஜவஹர்லால் நேரு அவர்களின் ஜாதகம்**

சூரியன் 211.43, சந்திரன் 109.20, செவ்வாய் 161.25, புதன் 198.35, குரு 256.38, சுக்கிரன் 188.48, சனி 132.15, ராகு 74.10, கேது 254.10, லக்னம் 114.25, M.C. 10ம் இடம் 21.14.

| | | | |
|---|---|---|---|
| | | | ரா |
| | ராசி 14-11-1889 | | லக் சந் |
| | | | சனி |
| குரு கே | சூரி | புத சுக் | செ |

| | | | |
|---|---|---|---|
| புத | செ | | |
| லக் ரா | அம்சம் | | சூரி சனி |
| | | | கே குரு |
| சுக் சந் | | | |

| | | | |
|---|---|---|---|
| | கே புத | குரு | |
| | தசாம்சம் | | சூரி |
| | | | செ |
| சனி சுக் | லக் | ரா | சந் |

10ம் இடம் M. C. 21.14. அதன் அம்ஸம் துலாம். துலாம் சரராசி - காற்று ராசி - அதன்

அதிபதி சுக்கிரனும் ராசியில் சர ராசியில் காற்று ராசியில் இருப்பதால் - பல தரம் அயல்நாடு சென்று வரும் யோகம் அமைந்தது.

தஸாம்ஸத்தில் 5ம் அதிபதி குரு - 9ம் அதிபதி சந்திரன். 5ம் அதிபதி குருவின் பார்வை - சந்திர னுக்கு ஏற்படுகிறது. (5-9ம் அதிபதிகள் சம்பந்தம்). உயர்கல்வி அயல்நாட்டில் பெரும் யோகம் பெற் றார்கள். 12ம் அதிபதி சுக்கிரன் 4ம் அதிபதி சனி யுடன் இணைந்து 12ல் இருப்பது ( 4-12ம் அதிபதி கள் சம்பந்தம்)

லக்னம், ராசி, சூரியனுக்கு 10ம் இடத்திற்கு குருவின் சம்பந்தம் ஏற்படுமானால், பட்டம், பதவி புகழ், செல்வம் அனைத்தும் பெரும் யோகம் என்று கூறுகிறது பராசர ஹோரா. ( இது ராசி அல்லது தஸாம்ஸத்தில் இருக்கலாம்)

ராசியில் :

லக்னம், ராசிக்கு 10ம் இடம் மேஷம். சூரிய னுக்கு 10ம் இடம் சிம்மம். குருவின் பார்வை. மேஷம், சிம்ம ராசிக்கு ஏற்படுவது உலகளவில் புகழ், பதவி பெறும் யோகமாக அமைந்தது.

விதி 2 :

3-5-10ம் அதிபதிகள் 10ம் வீட்டோடு சம்பந் தம் பெற்றாலும் அல்லது ஒன்றுக்கொன்று சம்பந் தம் பெற்றாலும் (ராசி அல்லது தஸாம்ஸத்தில்)

சிறந்த புத்தக ஆசிரியராகவும், அவரின் எழுத்துக்கள் உலகளவில் புகழ் பெறும் நிலையும் ஏற்படும்.

ராசியில் 3ம் அதிபதி புதன்
,, 5ம் ,, செவ்வாய்
,, 10ம் ,, செவ்வாய்

புதன், செவ்வாய் இரண்டும் 10ம் இடத்தைப் பார்ப்பதும் சிறந்த ஆசிரியர் என்பதைக் குறிக்கிறது.

தஸாம்ஸத்தில் :

3ம் அதிபதி சனி
5ம் ,, குரு
10ம் ,, சூரியன்

3ம் அதிபதி சனி 5ம் அதிபதி குருவின் வீட்டில் குரு - 3ம் பாவத்தை பார்க்கிறார். 10ம் அதிபதி சூரியனும் 3ம் பாவத்தைப் பார்க்கிறார். இதனால் உலகளவில் புகழ் பெற்ற டிஸ்கவரி ஆப் இந்தியா, இந்திராவிற்கு கடிதங்கள் என்ற இரண்டு நூல்கள் எழுதி அதனால் சிறந்த நூலாசிரியர் என பெயர் பெற்றார்கள்.

உதாரண ஜாதகத்தில் தஸாம்சத்தில் உள்ள கிரகநிலை வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| சனி ரா | | சுக் | |
| சூரி செ | தஸாம்ஸம் | | |
| | | | புத லக் |
| | குரு | | சந் கே |

தஸாம்ஸத்தில் 10ம் அதிபதி சுக்கிரன் 10ல் இருந்து, சனி, செவ்வாய், குருவின் பார்வை 10ம் இடத்திற்கு ஏற்பட்டதால் இஞ்ஜினியரிங் கல்வி பயின்று, இஞ்ஜினியராக அரசு உத்யோகம் பெற்று ஓய்வூதியம் பெறும்நிலை ஏற்பட்டது.

3ம், 10ம் அதிபதி - சுக்கிரன் 10ல்.
5ம் அதிபதி - குரு. 10ம் இடம் பார்வை.

சுக்கிரன் - குரு சமசப்தம பார்வை. ஜோதிட நூல்கள் எழுதும் யோகம் பெற்றார்.

10ம் இடத்திற்கு (5,8) குரு, செவ்வாய் (4-9) சுக்கிரன் (3-10) சம்பந்தம் பெற்று, சந்திரன் + கேது 2ம் இடத்தில் (12ம் அதிபதி) அமர்ந்ததால் ஜோதிடம் கற்கும் யோகமும், ஜோதிட ஆராய்ச்சி செய்யும் திறமையும் பெற்றார். (3-8ம் அதிபதிகள் 10ம் இடம் சம்பந்தம் பெற்றால் ஏதாவதொரு

துறையில் ஆராய்ச்சி செய்யும் திறமை உண்டாகும்)

6. துவதாம்ஸம் :

ஒரு ராசியை 12 பாகமாக பிரிப்பது. 1 பாகம் $2\frac{1}{2}^{0}$. முதல் துவதாம்ஸ ராசி அக் கிரகம் இடத்தில் இருந்து ஆரம்பமாகி 12வது இடத்தில் முடிவுறும்.

தாய் தந்தையரின் நிலையை, தகுதியை, தாய் தந்தையரால் நன்மையா, ஒற்றுமையுடன் இருப்பார்களா என்ற விபரத்தை அறியலாம்.

துவதாம்ஸத்தில் சந்திரன் 12ல் இருப்பது தாய்க்கு நலம் தராது. இளமையில் தாயை இழக்கும் நிலையும் அல்லது தாயாரால் நன்மை பெறாத நிலையையும் குறிக்கும்.

சூரியன் மறைவு ஸ்தானங்களில் இருந்தால் தந்தை-மகன் உறவு பாதிக்கப்படும். பிறக்கு முன்பே தந்தை இறக்கும் நிலைகூட ஏற்படலாம்.

சூரியன் ராசியில் 6-8 12ல் அல்லது அதன் அதிபதிகளுடன் சம்பந்தப்பட்டு இருந்து துவதாம்ஸத்தில் சந்திரன் தனுசுவில் இருந்தால் தந்தை - தான் பிறக்குமுன்பே இறந்துவிடுவார் என்பது விதியாகும்.

1. ராசியில் சந்திரன் - புதன் இணைந்திருந்தாலும், சமசப்தம பார்வை பெற்றால் அந்த

ஜாதகரின் தந்தைக்கு இரண்டு திருமணம் நடைபெற்றிருக்கும் அல்லது வேறொரு பெண்ணை மனைவிபோல்(keep) வைத்திருப்பார். அவர்களுடன் ராகு-கேது சம்பந்தப் பட்டால் கலப்பு திருமணமாக இருக்கும் (இது ராசி அல்லது துவதாம்ஸத்தில் இருக்கலாம்.)

உதாரண ஜாதகம் : பிரபல விஞ்ஞானி ஐசக் நியூட்டன் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| சனி கே | செ | | சந் |
| சுக் குரு | ராசி 14-1-1643 இங்கிலாந்து | | |
| | | | |
| புத சூரி | | லக் | ரா |

| | | | |
|---|---|---|---|
| | | புத | குரு |
| சந் | அம்சம் | | சனி ராகு |
| கே | | | |
| லக் | சூரி | செ | |

| | | | |
|---|---|---|---|
| சனி | | சுக் ராகு | |
| | துவதாம்ஸம் | | |
| புத | | | |
| லக், செ சந் குரு | கேது | சூரி | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| லக்னம் | 7.26 | சூரியன் | 26.16 | புதன் | 3.37 |
| சுக்கிரன் | 9.46 | குரு | 26.44 | சனி | 2.28 |
| செவ் | 20.11 | சந்திரன் | 15.06 | ராகு | 22.14 |

சூரியன் ராசியில் 3ம் பாவத்தில் இருந்து 9-12ம் அதிபதி புதனுடன் கூடி துவதாம்ஸத்தில் சந்திரன் தனுசுவில் இருந்த காரணத்தால் தான்பிறக்க மூன்று மாத முன்பே தந்தையை இழந்துவிட்டார்.

ராசியில் புதன்-சந்திரன் சம சப்தமபார்வை பெற்றதால் தன் தகப்பனாரின் இரண்டாவது மனைவிக்குப் பிறந்தவர் என்பது விதிக்கு ஒப்பாகிறது.

ராசியில் 5ம் அதிபதி சனி, கேதுவுடன் கூடி ராகுசம்பந்தம் பெற்றதால் திருமணமாகாதவர்.

ராகு லக்னம் : லக்னம் - ராகு டிகிரி
187.26 - 177.14, 10.12 மேஷம்

மேஷத்தில் செவ்வாய். இதனால் திருமண மாகவில்லை.

உபபதா : மீனம். அதில் சனி+கேது அதற்கு 2ல் செவ்வாய். 7ல் ராகு. உபபதாவிற்கு 11ம் அதிபதி சனி, கேதுவுடன். திருமணம் நடை பெறாத நிலையைக் குறிக்கிறது.

3-8-10ம் அதிபதிகள், குரு, சுக்கிரன், சந்திரன், சம்பந்தம் விஞ்ஞானியாக, சிறந்த

கண்டுபிடிப்பாளராக, நோபல் பரிசு பெற்றவர் என்பதை காட்டுகிறது. 9ம் அதிபதி (ராசிக்கு) சனி. 10ம் அதிபதி குரு. குரு-சனி பரிவர்த்தனை. சிறந்த தர்மகாமாதிபதியோக அமைப்பாகும். அழியாப்புதழ் பெறும் நிலையாகும்.

உதாரண ஜாதகத்தில் துவதாம்ஸத்தில் கிரக நிலை வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| லக் | சுக் | சூரி செ | புத |
| சனி | ராசி 1-6-1934 | | கே |
| ரா | | | |
| சந் | | | குரு |

| | | | |
|---|---|---|---|
| சனி கே | | குரு | சுக் |
| லக் | துவ தாம்ஸம் | | சூரி செ |
| | | | புத |
| | சந் | | ரா |

1. துவதாம்ஸத்தில் சூரியன் 6ல், 3-10ம் அதிபதி யுடன் இணைந்துள்ளதால் தந்தை 31 வயதில் காலமாகிவிட்டார்கள். சந்திரன் 10ல் இருந்து குருவின் பார்வை பெற்றதால் தாயார் 76 வயது வரை இருந்து ஜாதகரின் 59வது வயதில் காலமானார்கள்.

2. ராசியில் சந்திரன்-புதன் சமசப்தமபார்வை பெற்றதால் ஜாதகரின் தகப்பனார் இரண்டு திருமணம் செய்து கொண்டவர். இரண்டாவது மனைவிக்கு பிள்ளையாக பிறந்தவர்.

குறிப்பு : பிறந்த குழந்தையின் ராசியில் சூரியன் 6-8-12ல் அல்லது அதன் அதிபதிகளுடன் சம்பந்தப்பட்டு துவதாம்ஸத்தில் சந்திரன்-சிம்மம் அல்லது தனுசு ராசியில் இருந்தால் அந்தகுழந்தை பிறக்குமுன்பே - தந்தை இறந்திருப்பார் என்பது விதியாகும். ராசியில் உள்ள 4-9ம் அதிபதிகள் துவதாம்ஸத்தில் பலம் பெற்றால் தாய்தந்தையர் நீண்டநாட்கள் வாழ்ந்திருப்பார்கள்.

துவதாம்ஸத்தில் உள்ள லக்னத்திற்கு 4-9ம் அதிபதிகள் பலம் பெற்றால் தாய் தந்தையினால் அந்த ஜாதகருக்கு நன்மை கிட்டும்.

7. சித்தாம்ஸம் : ஒரு ராசியில் 24ல் ஒருபாகம். 1 பாகம் 1°.15' ஒற்றைபடை ராசியில் கிரகம் இருந்தால் சிம்ம ராசியில் இருந்தும் இரட்டை படை ராசியில் கிரகம் இருந்தால் கடக ராசியில் இருந்தும் ஆரம்பித்து கிரகங்களை பூர்த்தி செய்யவேண்டும்.

இதன் மூலம் ஒருவர் உயர்கல்வி பெற தகுதி யுடையவரா என்பதை அறியலாம்.

அவர் இன்ஜினியரிங் துறையில் தேர்ச்சி பெறுபவரா அல்லது மருத்துவத் துறையில் டாக்டர் பட்டம் பெறுபவரா என்பதை அறியலாம்.

சித்தாம்ஸத்தில் 2-4க்கதிபதிகள் புதன் பலம் பெற்று ஒன்றுக்கொன்று சம்பந்தம் பெற்றால் உயர்கல்வி பெற்று ஆராய்ச்சித் துறையில் டாக்டர் பட்டம் பெறலாம்.

கீழ்கண்டவாறு பிரிக்கப்பட்டுள்ளது

| | | |
|---|---|---|
| 1. | ஸ்கண்டா | 0.00-1.15 |
| 2. | பசுகரா | 1.15-2.30 |
| 3. | அனாலா | 2.30-3.45 |
| 4. | விஸ்வகர்மா | 3.45-5.00 |
| 5. | பாகா | 5.00-6.15 |
| 6. | மித்ரா | 6.15-7.30 |
| 7. | மாயா | 7.30-8.45 |
| 8. | அணடகா | 8.45-10.00 |
| 9. | விருஷ்வதா | 10.00-11.15 |
| 10. | கோவிந்தா | 11.15-12.30 |
| 11. | மாதனர் | 12.30-13.45 |
| 12. | மீமா | 13.45-15.00 |
| 13. | ஸ்கண்டா | 15.00-16.15 |
| 14. | பசுகரா | 16.15-17.30 |
| 15. | அனாலா | 17.30-18.45 |
| 16. | விஸ்வகர்மா | 18.45-20.00 |
| 17. | பாகா | 20.00-21.15 |
| 18. | மித்ரா | 21.15-22.30 |
| 19. | மாயா | 22.30-23.45 |
| 20. | அன்டகா | 23.45-25.00 |
| 21. | விருஷ்வதா | 25.00-26.15 |
| 22. | கோவிந்தா | 26.15-27.30 |
| 23. | மாதனா | 27.30.28.45 |
| 24. | மீமா | 28.45-30.00 |

கீழ்கண்ட பாகத்தில் சித்தாம்ஸத்தில் 2-4க் கதிபதியோ, புதனோ இதில் யார் பலமிக்கவரோ

அவர் இருந்தால் மருத்துவத்துறையில் டாக்டர் ஆகலாம்.

| | |
|---|---|
| ஸ்கண்டா | 0.0 - 1.15; 15.00 - 16.15 |
| பாகா | 5.00 - 6.15; 20.00 - 21.15 |
| மித்ரா | 6.15 - 7.30; 21.15 - 22.30 |
| அண்டகா | 8.45 - 10.00; 23.45 - 25.00 |

கீழ்கண்ட பாகத்தில் 2-4க்கதிபதியோ, புதனோ இவர்களில் பலமிக்கவர் யாரோ அவர் இருந்தால் இஞ்ஜினியராகலாம்.

விஸ்வகர்மா 3.45 - 5.00, - 18.45 - 20.00 இவர்களில் பலமிக்கவர் ஒற்றைப்படை ராசியில் இருந்தால் மேலே சொல்லப்பட்ட முறையிலும், இரட்டைப்படை ராசியில் இருந்தால் கீழ் இருந்து மேலாகவும் பார்க்க வேண்டும்.

**உதாரண ஜாதகத்தில் சித்தாம்ஸத்தில் கிரகநிலை வருமாறு :**

| | | | |
|---|---|---|---|
| | | லக்க | சந் |
| | சித்தாம்ஸம் | | |
| | | | |
| சுக்கி புதல் | ர,சூ. செ,கே ரா,ச | | |

ராசியில் 2ம் அதிபதி: செவ்வாய்.

இரட்டைப்படை ராசியில் 5.26

4ம் அதிபதி: புதன்.

ஒற்றைப்படை ராசியில் 6.14

4ம் அதிபதி சூரியன், செவ்வாயுடன் இணைந்து 10ம் அதிபதி சனியுடன் சம்பந்தப் பட்டு, 2ம் அதிபதியும், புதனும் - சுக்கிரனுடன் இணைந்துள்ளது. இதனால் இஞ்ஜினியரிங் படிப்பில் டிப்ளமா பெற்று அரசு உத்யோகம் பெற்று ஓய்வு பெற்ற நிலையை குறிக்கிறது.

2ம் அதிபதியும் 5ம் அதிபதியுமாகிய புதன் 7 - 12ம் அதிபதியுடன் இணைந்து 8ல் இருந்து 2ம் இடத்தைப் பார்ப்பதால் ஜோதிடம் கற்கும் (occult study) நிலையும் ஏற்பட்டது. புதன் பலம் பெற்று பாகா பகுதியில் (5.00 to 6.15க்குள்) இருப்பதால் ஜோதிடத்தில் பட்டம் பெறும் நிலை ஏற்படும்.

உதாரண ஜாதகம் : 2

| | | | |
|---|---|---|---|
| | | ல | செ |
| சந் குரு | ராசி | | ரா |
| சனி கே | | | சூரி |
| | | சுக் | புத |

| | | | |
|---|---|---|---|
| | | ராகு லக்க சூ. ச | சுக் குரு |
| புத | சித்தாம்ஸம் | | |
| சந் | | | |
| செ | | | |

சித்தாம்ஸத்தில் 2ம் அதிபதி-புதன்
4ம் அதிபதி-சூரியன்
9-10ம் அதிபதி-சனி

2-5ம் அதிபதி புதன் சித்தாம்ஸ லக்னத்திற்கு 10ல் இருந்து 4ம் அதிபதியும் சூரியனாகி 9-10ம் அதிபதி சனியாகி இருவரும் புதனை 10ம் இடத்தைப்பார்ப்பதும், குருவும் 10ம் இடத்தைப் பார்ப்பதாலும் இன்ஜினியரிங் துறையில் P.H.D. பட்டம் பெறும் யோகம் அமைந்தது. 10ம் இடம்பலம் பெற்றதால் அது காற்றுராசியாகவும் அமைந்ததால் அயல்நாட்டில் உத்யோகம் தொழில், அமைந்தது.

8. சஷ்டியாம்ஸம் :

ஒரு ராசியில் 60ல் ஒரு பாகம். 1 பாகம் ½டிகிரி அனைத்து நலன்களையும் குறிப்பதாகும்.

சஷ்டியாம்ஸம் கணிக்கும் முறையாவன :

உதாரண ஜாதகத்தில் செவ்வாய் ரிஷபத்தில் 5°.26°ல் இருக்கிறது. டிகிரியை மட்டும் எடுத்துக் கொண்டு அதை 2ல் பெருக்கி, அதில் டிகிரியை மட்டும் எடுத்துக் கொண்டு 12ல் வகுக்க மீதியுடன் ஒன்றைக் கூட்ட வரும் எண்ணை ரிஷபத்தில் இருந்து எண்ண வரும் ராசியே செவ்வாயின் சஷ்டியாம்ஸமாகும்.

5°.26×2 = 10°.52' = 10/12 = மீதி 10.
10+1 = 11. ரிஷபத்தில் இருந்து 11வது ராசி மீனம். மீனத்தில் செவ்வாய்.

2. சூரியன்: ரிஷபத்தில் $5^{\circ}.14$.
$5^{\circ}.14 \times 2 = 10^{\circ}.28 = 10/12$ மீதி 10.
$10 + 1 = 11$ ரிஷபத்தில் இருந்து 11வது ராசி மீனம். மீனத்தில் சூரியன்.

3. சந்திரன் 28.08 (தனுசு) $28.08 \times 2 = 56.16$.
$56/12 = 4$ மீதி 8. $8 + 1 = 9$. சந்திரன் இருக்கும் தனுசுராசியில் இருந்து 9வது ராசி சிம்மம். சிம்மத்தில் சந்திரன்.

4. புதன் - மிதுனம் 6.14. $6.14 \times 2 = 12.28$.
$12/12 = 1$ மீதி 0. $0 + 1 = 1$
மிதுனம் - புதனின் ராசியாகும்.

5. குரு - கன்னி. 20.19. $20.19 \times 2 = 40.38$
$40/12 = 3$ மீதி 4. $4 + 1 = 5$.
கன்னியில் இருந்து 5வது ராசி மகரம்.

6. சுக்கிரன் - மேஷம் 5.14. $5.14 \times 2 = 10.28$
10/12 மீதி 10. $10 + 11 = 21$. மேஷத்தில் இருந்து 11வது ராசி கும்பம்.

7. சனி - கும்பம் 4.52. $4.52 \times 2 = 9.44$.
9/12 மீதி 9. $9 + 1 = 10$.
கும்பத்தில் இருந்து 10வது ராசி விருட்சிகம்.

8. ராகு - மகரம் 20.33. $20.33 \times 2 = 41.06$.
$41/12 = 3$ மீதி 5. $5 + 1 = 6$.
மகரத்தில் இருந்து 6வது ராசி மிதுனம்.

9. லக்னம் : மீனம் 27.44. 27.44×2=55.28
55/12=4 மீதி 7. 7+1=8.
மீனத்தில் இருந்து 8வது ராசி துலாம்.

உதாரண ஜாதகத்தில் சஷ்டியாம்ச சக்கரம் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| செ சூரி | | | புத ரா |
| சுக் | சஷ்டி யாமஸம் | | |
| குரு | | | சந் |
| கே | சனி | லக் | |

சஷ்டியாம்ஸத்தில் 2ம் அதிபதி அல்லது குரு சுப சஷ்டியாம்சத்தில் இருந்தால் சிறந்த செல்வம் பெறும் யோகம் அமையும்.

10ம் அதிபதி சுப சஷ்டியாம்சத்தில் இருந்தால் நல்ல தொழில் அமையும்.

8ம் பாவத்தில் உள்ள கிரகம் அசுப சஷ்டியாம்சத்தில் இருந்தால் விபத்துக்களை சந்திக்கும் நிலை ஏற்படும்.

## சஷ்டியாம்ஸம்

| ஒற்றைப்படை ராசியில் | | | இரட்டைப் படைராசியில் |
|---|---|---|---|
| 0.0-0.30 | ஹோரரா | (அசுபர்) | 29.30-30.0 |
| 0.30-1.00 | ரஷ்சகா | ( ,, ) | 29.00-29.30 |
| 1.00-1.30 | தேவா | (சுபர்) | 28.30-29.00 |
| 1.30-2.00 | குபேரா | ( ,, ) | 28.00-28 30 |
| 2.00-2.30 | யக்ஷகா | ( ,, ) | 27.30-28.00 |
| 2.30-3.00 | கினாரா | ( ,, ) | 27.00-27.30 |
| 3.00-6.00 | அசுபர்கள் | ( ,, ) | 24.00-27.00 |
| 6.00-7.00 | சுபர் | | 23.00-24.00 |
| 7.00-8.00 | அசுபர் | | 23.00-22.00 |
| 8.00-14.30 | சுபர் | | 22.00-15.30 |
| 14.30-18.00 | அசுபர் | | 15.30-12.00 |
| 18.00-19.30 | சுபர் | | 12.00-10.31 |
| 19.30-22.00 | அசுபர் | | 10.30-8.00 |
| 22 00-23.30 | சுபர் | | 8.00-6.30 |
| 23.30-24.00 | அசுபர் | | 6.30-6.00 |
| 24.00-25.00 | சுபர் | | 6.00-5.00 |
| 25.00-26.00 | அசுபர் | | 5.00-4.00 |
| 26.00-27.00 | சுபர் | | 4,00-3.00 |
| 27.00-27.30 | அசுபர் | | 3.00-2.30 |
| 27.30-29.00 | சுபர் | | 2.30-1.00 |
| 29.00-29.30 | அசுபர் | | 1.00-0.30 |
| 29.30-30.00 | சுபர் | | 0.00-0.30 |

மேலே கூறப்பட்டுள்ள முக்கியமான 8 வர்க்கங்களிலும், ராசியிலும், ஒரு கிரகம் தன் உச்ச வீட்டிலோ, மூலதிரிகோண ராசியிலோ அல்லது தன் சொந்த வீட்டிலோ இருந்தால் அந்த கிரகம் பலம் பெறும் என்பதும், 9வர்க்கங்களில் அதிகமான ஆட்சி, உச்ச, மூலதிரிகோண வீடுகளில் இருப்பதை பொருத்து பலம்பெறுமென்பதும் விதிமுறையாகும்.

கிரகங்கள் ஒருநாளையில் செல்லும் தூரம் வருமாறு

| | | | பா. | மி. | செ |
|---|---|---|---|---|---|
| 1. சூரியன் ஒருநாளில் செல்லும் தூரம் | | | 0 | 59 | 08 |
| 2. சந்திரன் | ,, | ,, | 13o | 10o | 34 |
| 3. செவ்வாய் | ,, | ,, | 0 | 31 | 26 |
| 4. புதன் | ,, | ,, | 4 | 5 | 32 |
| 5. குரு | ,, | ,, | 0 | 4 | 59 |
| 6. சுக்கிரன் | ,, | ,, | 1 | 36 | 07 |
| 7. சனி | ,, | ,, | 0 | 2 | 0 |

(1o4 நிமிஷம்)

| 2. ராசிகள் | மேலைநாட்டுக்குறியீடுகள் |
|---|---|
| மேஷம் | ♈ |
| ரிஷபம் | ♉ |
| மிதுனம் | ♊ |
| கடகம் | ♋ |
| சிம்மம் | ♌ |
| கன்னி | ♍ |
| துலாம் | ♎ |
| விருட்சிகம் | ♏ |
| தனுசு | ♐ |
| மகரம் | ♑ |
| கும்பம் | ♒ |
| மீனம் | ♓ |

| 3. கிரகங்கள் | |
|---|---|
| சூரியன் | ☉ |
| சந்திரன் | ☽ |
| செவ்வாய் | ♂ |
| புதன் | ☿ |
| குரு | ♃ |
| சனி | ♄ |
| ராகு | ☊ |
| கேது | ☋ |

ஒரு வருடத்தின் அய்யனாம்ஸத்தை
எப்படிக் கண்டுபிடிப்பது?

எந்த ஆண்டிற்கு அய்யனாம்சம் தேவையோ அந்த ஆண்டில் இருந்து 397ஐ கழித்து 50 1/3 செகண்டால் பெருக்கி வரும் டிகிரியே அந்த ஆண்டின் அய்யனாம்ஸமாகும்.

இதில் 361, 394ஐ கழிக்கலாம் என்பது ஒரு சாராரின் கருத்தாகும்.

ஆனால் டாக்டர் B. V. ராமன் அவர்களின் அய்யனாம்சம் கணிதப்பிரகாரம் 397ஐ கழிக்க வேண்டும்.

1993ம் ஆண்டிற்குறிய அய்யனாம்சம் வருமாறு:

1993 - 397 - 1596x50 1/3 - 80332

22°. 18.52

1. ஹோரா அட்டவணை

| ராசி | | 1°-15° வரை | 15.01-30° வரை |
|---|---|---|---|
| 1. | மேஷம் | சூரியன் | சந்திரன் |
| 2. | ரிஷபம் | சந்திரன் | சூரியன் |
| 3. | மிதுனம் | சூரியன் | சந்திரன் |
| 4. | கடகம் | சந்திரன் | சூரியன் |
| 5. | சிம்மம் | சூரியன் | சந்திரன் |
| 6. | கன்னி | சந்திரன் | சூரியன் |
| 7. | துலாம் | சூரியன் | சந்திரன் |
| 8. | விருட்சிகம் | சந்திரன் | சூரியன் |
| 9. | தனுசு | சூரியன் | சந்திரன் |
| 10. | மகரம் | சந்திரன் | சூரியன் |
| 11. | கும்பம் | சூரியன் | சந்திரன் |
| 12. | மீனம் | சந்திரன் | சூரியன் |

## 2. நவரம்ஸம்

| ராசி | 1வது | 2. | 3. | 4. |
|---|---|---|---|---|
| | 0.3.20 | 3.20 | 6.40 | 10.0 |
| | | 6.40 | 10.00 | 13.20 |
| 1. மேஷ | மேஷ | ரிஷப | மிதுன | கடக |
| 2. ரிஷப | மகர | கும்ப | மீனம் | மேஷ |
| 3. மிதுன | துலா | விருட் | தனுசு | மகர |
| 4. கடக | கடக | சிம்ம | கன்னி | துலா |
| 5. சிம்ம | மேஷ | ரிஷப | மிதுன | கடக |
| 6. கன்னி | மகர | கும்ப | மீனம் | மேஷ |
| 7. துலா | துலா | விருட் | தனுசு | மகர |
| 8. விருட் | கடக | சிம்ம | கன்னி | துலா |
| 9. தனுசு | மேஷ | ரிஷப | மிதுன | கடக |
| 10. மகர | மகர | கும்ப | மீனம் | மேஷ |
| 11. கும்ப | துலா | விருட் | தனுசு | மகர |
| 12. மீனம் | கடக | சிம்ம | கன்னி | துலா |

| 5. | 6. | 7. | 8. | 9. |
|---|---|---|---|---|
| 13.20 | 16.40 | 20.00 | 23.40 | 26.40 |
| 16,40 | 20.00 | 23.20 | 26.40 | 30.00 |
| சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு |
| ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி |
| கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன |
| விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் |
| சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு |
| ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி |
| கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன |
| விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் |
| சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு |
| ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி |
| கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன |
| விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் |

3. தஸாம்ஸம்

| ராசி | 1. 0-3° | 2. 3°-6 | 3. 6°-9 | 4. 9°-12 |
|---|---|---|---|---|
| 1. மேஷ | மேஷ | ரிஷப | மிதுன | கடக |
| 2. ரிஷப | மகர | கும்ப | மீனம் | மேஷ |
| 3. மிதுன | மிதுன | கடக | சிம்ம | கன்னி |
| 4. கடக | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன |
| 5. சிம்ம | சிம்ம | கன்னி | துலா | விருட் |
| 6. கன்னி | ரிஷப | மிதுன | கடக | சிம்ம |
| 7. துலா | துலா | விருட் | தனுசு | மகர |
| 8. விருட் | கடக | சிம்ம | கன்னி | துலா |
| 9. தனுசு | தனுசு | மகர | கும்ப | மீனம் |
| 10. மகர | கன்னி | துலா | விருட் | தனுசு |
| 11. கும்ப | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப |
| 12. மீனம் | விருட் | தனுசு | மகர | கும்ப |

| 5. | 6. | 7. | 8. | 9. | 10. |
|---|---|---|---|---|---|
| 12.15 | 15.18 | 18.21 | 21.24 | 24.27 | 27.30 |
| சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு | மகர |
| ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி | துலா |
| துலா | விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் |
| கடக | சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு |
| தனுசு | மகர | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப |
| கன்னி | துலா | விருட் | தனுசு | மகர | கும்ப |
| கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன | கடக |
| விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் | மேஷ |
| மேஷ | ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி |
| மகர | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன |
| மிதுன | கடக | சிம்ம | கன்னி | துலா | விருட் |
| மீனம் | மேஷ | ரிஷப | மிதுன | கடக | சிம்ம |

4. துவதாம்ஸம்

| | ராசி | 1. | 2. | 3. | 4 | 5. |
|---|---|---|---|---|---|---|
| | | $2\frac{1}{2}^0$ | $5^0$ | $7\frac{1}{2}^0$ | $10^0$ | $12\frac{1}{2}^0$ |
| | | வரை | வரை | வரை | வரை | வரை |
| 1. | மேஷ | மேஷ | ரிஷப | மிதுன | கடக | சிம்ம |
| 2. | ரிஷப | ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி |
| 3. | மிதுன | மிதுன | கடக | சிம்ம | கன்னி | துலா |
| 4. | கடக | கடக | சிம்ம | கன்னி | துலா | விருட் |
| 5. | சிம்ம | சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு |
| 6. | கன்னி | கன்னி | துலா | விருட் | தனுசு | மகர |
| 7. | துலா | துலா | விருட் | தனுசு | மகர | கும்ப |
| 8. | விருட் | விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் |
| 9. | தனுசு | தனுசு | மகர | கும்ப | மீனம் | மேஷ |
| 10. | மகர | மகர | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப |
| 11. | கும்ப | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன |
| 12. | மீனம் | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன | கடக |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 6. | 7. | 8. | 9. | 11. | 11 | 12 |
| $15^0$ | $17\frac{1}{2}^0$ | $20^0$ | $22\frac{1}{2}^0$ | $25^0$ | $27\frac{1}{2}^0$ | $30^0$ |
| வரை | வரை | வரை | வரை | வரை | வரை | வரை |
| கன்னி | துலா | விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் |
| துலா | விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் | மேஷ |
| விருட் | தனுசு | மகர | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப |
| தனுசு | மகர | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன |
| மகர | கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன | கடக |
| கும்ப | மீனம் | மேஷ | ரிஷப | மிதுன | கடக | சிம்ம |
| மீனம் | மேஷ | ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி |
| மேஷ | ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி | துலா |
| ரிஷப | மிதுன | கடக | சிம்ம | கன்னி | துலா | விருட் |
| மிதுன | கடக | சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு |
| கடக | சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு | மகர |
| சிம்ம | கன்னி | துலா | விருட் | தனுசு | மகர | கும்ப |

5. திரிகோண அட்டவணை

| | ராசி | முதல் திரேக்காணம் 0.10⁰ | 2வது திரேக்காணம் 10.01-20.0 | 3வது திரேக்காணம் 20.01-30⁰0 |
|---|---|---|---|---|
| 1. | மேஷம் | மேஷம் | சிம்மம் | தனுசு |
| 2. | ரிஷபம் | ரிஷபம் | கன்னி | மகரம் |
| 3 | மிதுனம் | மிதுனம் | துலாம் | கும்பம் |
| 4 | கடகம் | கடகம் | விருட்சிகம் | மீனம் |
| 5. | சிம்மம் | சிம்மம் | தனுசு | மேஷம் |
| 6. | கன்னி | கன்னி | மகரம் | ரிஷபம் |
| 7. | துலாம் | துலாம் | கும்பம் | மிதுனம் |
| 8. | விருட்சிகம் | விருட்சிகம் | மீனம் | கடகம் |
| 9. | தனுசு | தனுசு | மேஷம் | சிம்மம் |
| 10. | மகரம் | மகரம் | ரிஷபம் | கன்னி |
| 11. | கும்பம் | கும்பம் | மிதுனம் | துலாம் |
| 12. | மீனம் | மீனம் | கடகம் | விருட்சிகம் |



# எமது ஜோதிட நூல்கள்

| | |
|---|---|
| அதிர்ஷ்டம் தரும் என் ஜோதிடம் ... | 12 - 00 |
| சாஸ்திரப்படி நீங்களும் சொந்த வீடு கட்டுங்கள் ... | 12 - 50 |
| நீங்களும் ஜோதிடம் கற்கலாம் ... | 20 - 00 |
| குருபகவான் தரும் ராஜ யோகம் ... | 10 - 00 |
| வர்க்க பலன் தரும் யோகங்கள் ... | 10 - 00 |
| ஆயுளை தெரிந்துக் கொள்ள ஜோதிடம் ... | 10 - 00 |
| புகழ் தரும் ராகு ஞானம் தரும் கேது ... | 10 - 00 |



91, வி. எம். தெரு,
மயிலாப்பூர், சென்னை - 600 004.